# சேந்தனார்





அருளிய

"திருவாதிரைத் திருக்களி அமுதும்"
"தில்லைத் திருத்தேர் விழாவும்"





“தென்தில்லை மன்றினுள் ஆடீ போற்றி!
இன்றெனக்கு ஆரமுது ஆனாய் போற்றி”



உ
திரு அருள் துணை.
திருச்சிற்றம்பலம்.

# சேந்தனார் வரலாறு.

சோழ அரசர்களின் தலைநகரமாம் 'காவிரிப்பூம் பட்டினம்' பெரும் துறைமுக நகரமாக விளங்கியது. அதன்கண் வாழ்ந்த கப்பல் வணிகர்களுள் முதன்மை யானவர், திருவெண் காடரெனும் பட்டினத்து அடிகள் ஆவார். அடிகளார், பெருஞ்செல்வராக விளங்கியதுடன் சிவாநுபூதிச் செல்வராகவும் திகழ்ந்தார். ஆயினும் 'மகப்பேறு' இன்மை குறித்தும், குருவருளை நாடியும் வருந்தித் தவங்கிடந்தார்.

மிகவும் வறிஞனான அந்தணன் ஒருவன், இடை மருதீசன் அருளாற்பெற்ற ஓர் ஆண்மகவை அடிகளாரிடம்

விற்று, அதன் எடைக்குச் சரியான பொன் பெற்றுச் சென்ருன். அக்குழந்தை 'மருதவாணன்' என்ற பெயருடன் வாழையிளங் குருத்தெனவும், வளர்பிறையெனவும் வளர்ந்து 'அலைகடல் நடுவண் பலகலம் செலுத்திக்' குபேரச் செல்வம் ஈட்டியது. பெற்ருேர், மருதவாணனின் செயற்கருஞ் செய்கைகளைக்கண்டு மனமுவந்து வாழ்ந்தனர்.

பட்டினத்தடிகளாரிடம், தலைமைக் காரியம் பார்ப்பவர்களுள், 'நாங்கூர்ச் சேந்தனுர்' என்பவர் தலைசிறந்து விளங்கினுர். அவர், அன்பு, அறிவு, ஒழுக்கம் முதலியவைகளுட் சிறந்தும், சத்தியம், தவம், தானம் முதலிய நற்செயல்களால் உயர்ந்தும், அடிகளாருடைய காரியங்களைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்தும் வாழ்ந்து வந்தார்.

ஒருநாள் மருதவாணன், தன் அன்னையிடம் சிறு பெட்டியொன்றைக் கொடுத்து, தந்தையார் வந்ததும் கொடுக்கும்படி கூறிச்சென்று மறைந்தனன். குருவருளை நாடி வருந்தும் அடிகளார், மனைவி கொடுத்த பெட்டியைப்பார்க்க அதில் 'காதற்ற ஊசியும் வாராதுகாணும் கடைவழிக்கே' என எழுதிய ஓலைத்துணுக்குடன், காதற்ற ஊசியொன்றும் இருக்கக்கண்டார். அடிகளார், மருதவாண

லைப் பல இடங்களிலும் தேடச்செய்தும் காணுது வருந்தி, 'இஃது இடைமருதீசனின் திருவிளையாடல்' என்று நினைந்து அப்போதே துறவு உள்ளங்கொண்டார்.

அடிகளார், சேந்தனுரை அழைப்பித்து "அப்பா! சேந்தா! யாம் துறவு பூணும்படி திருவருள் கூட்டி நின்றது; மருதவாணன் தந்த பொருள்களை எல்லாம் மக்கள் பலரும் பெறும்படி கொள்ளை இட்டுவிடு" என்றருளி, ஒரு பற்றுமின்றி வெளியேறினுர். உடனே சேந்தனுர் அடிகளார் கூறிய வண்ணம் பொருள்களையெல்லாம் சூறையிட்டனர். - அவ்வூர் அரசன் அதனையறிந்து எஞ்சிய பொருள்கள் கொள்ளை போகாவண்ணம் தடுத்து அடிகளாரின் தமக்கை மகனுக்கு அதில் ஒரு பகுதியைக் கொடுத்து, மிஞ்சிய பொருள்களையெல்லாம் பற்பல அறங்களில் செலவிடும்படி ஆணைபிறப்பித்தான்.

பின்னர் அரசன், சேந்தனுரது உண்மை நிலையினைச் சிறிதும் அறியாதவனுய், அவரை அழைப்பித்து, 'வெண்காடரது பொருள்கள் இன்னும் எங்கெங்கே உள்ளன; அவைகளையும் ஒளியாது எமக்குக் காட்டும்' என்று அச்சுறுத்திக்கேட்டான். உண்மையாளராம் நம் சேந்தனுர், 'அரசே! அடிகளாரின் பொருள் இவைகளேயன்றி

வேறில்லை என்றூர்.' அரசன் அதனை நம்பாது. தன் சேவகர்களை நோக்கி 'இவர் பட்டினத்து அடிகளாரின் பொருள் முழுவதையும் எமக்குக் காட்டும் வரையில் சிறையிலடைத்து வையுங்கள்.' என உத்தரவு கொடுத்ததுமன்றிச் சேந்தனூரின் சொந்தப் பொருள் களையும் அடிகளாரது பொருளெனவே கூறி, அவைகளை யும் கைப்பற்றிக் கொண்டான். அப்பொழுதே, அரசனது துன்பத்திற்கு அஞ்சிய சேந்தனூரின் திருமனைவியாராம் பூங்குழலியார், தன் மைந்தனுடன் வேற்றூர் சென்று கூலிவேலை செய்து வசித்து வந்தனர்.

இங்ஙனம் நிகழும் நாளில் "பட்டினத்தடிகள்" திருவெண்காட்டில் எழுந்தருளி இருக்கும் செய்தியைப் பூங்குழலியார் கேட்டு மைந்தருடன் அங்குச் சென்று அடிகளாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் கதறி அழுதனர். அடிகளார், அவ்வம்மையாரை நோக்கி, 'நீங் கள் யார்'? 'உங்கட்கு நேர்ந்த குறை யாது'? என வினவினர். அம்மையார் நிகழ்ந்தன அனைத்துங் கூறிச் 'சேந்தனூரைச் சிறையினின்றும் மீட்டருள வேண்டுமென்று வேண்டி மீண்டும் பணிந்தனர். அதனைக் கேட்ட பேரரு ளாளராகிய அடிகளார், திருவுள மிரங்கிச் சிவபெருமானது சந்நிதியை அடைந்து,

"மத்தனை தயிருண்டானும் மலர்மிசை மன்னினனும்
நித்தமும் தேடிக்காண நிமலனே! அமல மூர்த்தி!
செய்த்தலைக் கயல்பாய் நாங்கூர்ச் சேந்தனை வேந்தனிட்ட
கைத்தளை நீக்கி என்முன் காட்டுவெண் காட்டுளானே"

எனப்பாடி இறைஞ்சினர்.

அடிகளாரது வேண்டுகோளுக்கு இரங்கிய சிவபெருமான் சேந்தனரைச் சிறையினின்றும் நீக்கித் திருவெண்காடர் முன்னே இருக்கும்படி செய்தனர். குருமணியைக் காணப்பெற்ற சேந்தனர், அடிகளாரின் அடிகளில் வீழ்ந்து வணங்கி, 'எம்பெருமானே! அடியேனை, வேந்தனிட்ட சிறையினின்றும் நீக்கியருளியதுபோலப் பாசச் சிறையினின்றும் மீட்டருள வேண்டுமென்று' மீட்டும் இறைஞ்சினர்.

அப்போது பட்டினத்தார் சேந்தனரது பரிபாக நிலைமையை நோக்கி "நீ, தில்லைத் திருத்தலத்தை அடைந்து, அங்குக் காட்டு விறகு விற்று, அதனல் பெறும் பொருளைக்கொண்டு சிவனடியார் ஒருவர்க்கு நாள்தோறும் அன்னமிட்டு வாசம் செய்க! எனக்கட்டளையிட்டருளினர். சேந்தனர், குருமணியைப் பணிந்து அவர் ஆணைதந்த வண்ணம் தில்லைத் திருத்தலத்தை அடைந்து காட்டிற்குச்

சென்று விறகு வெட்டி விற்று, அதனுல் வரும் பொருள் கொண்டு சிவனடியார் ஒருவர்க்கு அன்னமிட்டு அவ் விரதங் குன்ருவண்ணம் இயற்றி மனைவி மக்களுடன் சீவனம் செய்து வந்தார்.

இங்ஙனம் செய்துவரும் நாட்களில் ஒருசமயம் ஏழு நாள் அடர்ந்த மழையுடன் பெருங் காற்றடித்து, மனிதர் வெளியில் சஞ்சரிக்க இயலாமல் இருந்தது. அவ்வாறிருந் தும் சேந்தனுர் காடு சென்று விறகு வெட்டி வந்து அதனை விற்றுப்பெற்ற கேழ்வரகு மாவினைத் தமது மனைவி கையிற் கொடுக்க, அணங்கனைய அவ்வம்மையார், அதனைக் களியமுதாகச் செய்து அடியவ்ரை அழைத்து வரும்படி வேண்டினர்; இரவும் வந்தது.

சேந்தனுர், பெருங்காற்று மழையில் எங்கும் அலைந்து அடியவரைத் தேடியும், ஓர் அடியவரையும் காணுமல் ஏங்கிக் கோயில் மண்டபங்கள்தோறும் புகுந்து தேடுவா ராயினுர். தில்லைத் திருவம்பலக் கூத்தன், சேந்தனுரின் அன்புடன், அவர் அளிக்கும் களியமுதினை அமுதுசெய்ய விரும்பி முதுமைக்கோலம் பூண்டு, பசியுடன் ஓர் மண்ட பத்தின் மூலையில் அடியவர்போலப் படுத்திருந்தார். அது கண்ட சேந்தனுர் விரைந்து சென்று அவரைத் தம்மில்லத்

திற்கு உணவு அருந்த வரும்படி வேண்டினுர். அடியவரும் அதற்கு இசைந்து புறப்பட்டார்.

சேந்தனுர் அம்முதிய அடியவரைத் தமது இல்லிற்கு அழைத்துச் சென்று, அவரது மேனிக் குளிர் நடுக்கத்தைப் போக்கி, அடியவரைச் சிவனெனவே பாவித்துப் பாத பூசை முடித்துத் தலைவாழையிலையில் தமது பழந் துணியில் முடிந்திருந்த திருக்களியமுதினை அவிழ்த்துப் படைத்து உண்ணச் செய்தனர். அடியவரும் "இக்களியமுது, தேவர் அமுதினும் இனிக்கிறது" என்று கூறி, எஞ்சிய களியமுதினைக் கிழிந்த பழந்துணி மூட்டையுடன் பெற்றுச் சென்று மறைந்தனர். அப்பால் சேந்தனுர், எஞ்சிய உணவுண்டு யோக நித்திரையில் ஆழ்ந்தார்.

திருச்சிற்றம்பலக் கூத்தனுர், அப்பொழுது நடைபெறும் அர்த்தசாம தரிசனத்துக்கு வந்திருந்த திருமால், பிரமன், இந்திரன், தேவர், முனிவர் முதலானவர்கட்கும், சேந்தன் தமக்கு நிவேதித்த திருக்களி அமுதின் சுவையை வியந்து கூறி, அம்மூட்டையினை அவிழ்த்து அத்திருக்களி அமுதினை அவர்கட்கெல்லாம் பிரசாதமாகக் கொடுத்தருளி, பார்வதி அம்மையார் களிக்க அவருடன் அமர்ந்தருளினுர்.

சோழன், திருவம்பலக் கூத்தனின் பூசை முடிவில் இறைவனருளால் உண்டாகும் மணியோசை கேட்ட பின்னரே உணவுண்பது, என்பதனை விரதமாகக் கொண் டிருந்தனன். அன்று நள்ளிரவு கடந்தும் மணியோசை கேளாது ஒழியவே மனம் வருந்தினன். அதனால் உணவு அருந்தாமல் தரையில் துயின்றான். சேந்தனாரது பக்திப் பெருக்கால் அளித்த அக்களியமுதுடன் அவரது பெரு மையையும் உலகறியச் செய்யத் திருவுளங் கொண்ட இறைவன் சோழனது கனவிற் சென்று 'சோழ அரசனே! சேந்தன் விரும்பிய வண்ணம் அவனில்லம் சென்று களியமுது உண்டு வந்தமையால், நீ செய்வித்த பூசனைக்கு வரத்தடைப்பட்டது' என்றருளி மறைந்தார்.

சோழ அரசன், வியந்து விழித்தெழுந்து கண்ணீர் வாரக் கரங்களைச் சிரமேற் குவித்து, 'பெருமானே! அச் சேந்தனாரின் நட்பு எனக்குக்கிடைக்குமாறு அருள் செய்க!' என்று இறைஞ்சினான். பின்னர் பொழுது விடிந்ததும் நித்திய கருமபூசைகளை முடித்துத் திருவம்பலம் சென் றான். திருவம்பலத் திருமுற்றமெங்கும் களியமுது சிந்திக் கிடத்தலையும், தெய்வத்திரு மணம் வீசுதலையும் தன் னுடன் வரும் தில்லை வாழ் அந்தணர்கள் முதலியவர் களுடன் கண்டு, அவர்கட்கு எல்லாம் தனது கனாநிலை

யைக் கூறினன். அதனைக் கேட்ட அனைவரும், திருவம் பலக் கூத்தனது திருவிளையாடலை நினைந்து கண்ணீர் வார வியந்து பரவிப் பாராட்டினர். பின்னர், அரசன் அவரிருக்குமிடம் விசாரித்துச் சென்று வணங்கி அவரைத் தமதரண்மனையிற் கொண்டு போய் பல சிறப்புக்கள் செய்து அவர் அருளைப் பெற்றனன்.

இந்தச் சேந்தனர், இறைவனுக்குக் களியமுது, கிழிந்த பழந்துணி மூட்டையினை அவிழ்த்துத் தனது ஆசையற்ற அவிழ்ந்த மனத்துடன் கொடுத்த தன் மையைத் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனர், தாமருளிய 'திருக்களிற்றுப்படியாரில்' பாராட்டியுள் ளார்; இதனை,

"அவிழ்ந்த துணியில் அவிழ்ந்த அவிழை
அவிழ்ந்த மனத்தால் அவிழ்க்க — அவிழ்ந்தசடை
வேந்தனர்க்கு இன்னமுதம் ஆயிற்றே மெய்யன்பின்
சேந்தனர் செய்த செயல்"

என்னும் 53-ஆம் பாடலால் அறியலாம். இப்பாடல், அகமார்க்கத்தால் அன்பு செய்க! என்ற கருத்தினை விளக்க வந்த, திருவியலூர் உய்யவந்த தேவநாயனர் இயற்றிய திருவுந்தியாரில் வந்துள்ள

"அவிழ இருக்கும் அறிவுடனின்றவர்க்கு
அவிழும் இவ்வல்லல் என்று உந்தீபற!
அன்றி அவிழாதென்று உந்தீபற."

என்னும் பாடலை விளக்கவந்ததாகும். சிவஞான முனிவரும் "தவிட்டமுதம் சேந்தனிட உண்டனை" என இச் செய்தியைக் கூறியுள்ளார். இச்சேந்தனாரின் பெருமையையும் அவரது அன்பின் பெருக்கினையும் அவர் இறைவர்க்கு இட்ட திருக்களியமுதின் இனிமையையும் நம்மால் எவ்வாறு கூற இயலும்.

மேலே கூறப்பட்ட பெருங்காற்று மழை காரணமாகவோ? சேந்தனாரின் பெருமையினை உலகு அறிந்து உய்தற்பொருட்டாக இறைவனதுசெயலாகவோ மார்கழித் தேர்த் திருவிழாவின்கண் தில்லைத் திருத்தேர், நிலையினின்றும் நகரவில்லை. அதுகண்ட அரசன் முதலாம் அன்பர்கள் பலரும் வருந்தி, "மால், அயன், முதலாம் தேவர் கணங்களும், முனிவர்களும் இந்தப் பூலோக கைலாயமே சிவனருள் பெறுதற்குக் காரணமான இடம் என்று மானுடத்தியல்பில் மக்களோடு மக்களாய் மறைந்து நின்று வழிபட்டுய்யும் இத்தில்லைத் திருத்தேர்விழா, நடந்தேறும் வண்ணம் அருளுக" என்று சேந்தனாரை அடைந்து வணங்கி வேண்டினர்.

சேந்தனர் இறைவன் திருவருளை நினைந்து திருத்தேரின் முன்வந்து நின்ற இறைவனருள்பெற்றுக் கண்ணீர் வாரவும் கரம் சிரமேற் குவியவும், தேரின்கண் எழுந்தருளியிருக்கும் கூத்தப் பெருமானை நோக்கித் திருப்பல்லாண்டு பாடிக்கொண்டே புறங்காட்டாமல் பின்னோக்கிச் சென்றனர்.

அன்பரின் அன்புகலந்த இனிய திருப்பாடலைத் திருச்செவிமடுத்தவண்ணம் கூத்தப் பெருமான் அவர்பின் தொடர்ந்து கேட்டருளும் வண்ணம், தில்லைத் திருத்தேர் தானகவே நிலையினின்றும் நகர்ந்து உருண்டு செல்வதாயிற்று. அதனைக் கண்ணுற்ற அரசன் முதலிய அன்பர்கள் பலரும் திருவிழாக் காணவந்த ஏனைய மக்களும் அற்புதம்! அற்புதம்! என்று வியந்து அரகர முழக்கம் செய்தனர். சேவிக்கப்பெற்ற தேவர்களின் அருளால் தெய்வப் பூமழை எங்கும் பொழிந்தது. மக்கள் கூட்டத்தோடு நாரணன் நான்முகன் முதலாம் தேவர் முனிவர் கணங்களும் திருவருள் பெற்றுப் பல்லாண்டு பாடினர், ஆடினர். சேந்தனர் பாடியருளிய தெய்வத் திருப்பல்லாண்டுப் பாடல்கள் மூன்று பாடலுக்கு ஒரு வீதியாக நான்கு வீதியும் தேர் ஓடி நிலைக்குவந்து நின்றது எனின்! அவர் பாடிய தெய்வத் திருப்பல்லாண்டின் பெருமையைக்

கூற எவரால் இயலும். அந்த ஒன்பதாம் திருமுறைப் பாடலுள் ஒன்றனை நோக்குவோம். அப்பாடல்

"ஆரார் வந்தார் அமரர் குழாத்துள்
அணியுடை ஆதிரைநாள்
நாராயண னொடு நான்முகன் அங்கி
இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர்குழாங்கள் திசை
அனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும்
பல்லாண்டு கூறுதுமே." என்பதாம்.

பின்னர், சேந்தனார் அரசனின் வேண்டுகோளின்படி விறகு வெட்டும் தொழிலை விட்டு, பலதலங்களையும் தரிசித்துத் திருவீழிமிழலை இறைவனைத் திருவிசைப்பாவினால் துதித்து இறைவன் திருவடி நீழலைஎய்தினர்.

சேந்தனார் வாழ்ந்த காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கமும் ஆகும் என ஆராய்ச்சியறிஞர் கூறுவார்கள். சேந்தனார் அருளிய 'மன்னுகதில்லை வளர்க நம் பத்தர்கள்' எனத் தொடங்கும் திருப்பல்லாண்டுத் திருப்பதிகம் கடல்கடந்து பரவிய சோழ மன்னர் ஆட்சியிலே சயாம் நாட்டில்

மன்னர்கள் செய்யும் சிறப்புடைய நிகழ்ச்சிகளில் திருவெம் பாவையுடன் சேர்த்து ஓதப்பெற்று வரும் சிறப்பினைப் பெற்றது என ஆராய்ச்சியாளர் கூறும் உண்மை நம் சைவ மக்களால் நினைந்து போற்றத்தகுவதாகும்.

ஸ்ரீலஸ்ரீ காசி வாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளாம், பெருமானடிகளவர்களும் தில்லைத்திருத் தேர்விழாவின்கண், உயர்ந்த ஓதுவாமூர்த்திகள் பலரைக் கொண்டு நான்கு வீதியின் கண்ணும் திருத்தேரின் முன் புறங்காட்டாது தெய்வத் திருப்பல்லாண்டுப் பாடல்களை ஆண்டுதோறும் சேந்தனாரைப்போலவே பாடச்செய்து அவ்வறக்கட்டளைக்கு வேண்டும் நிதியமைத்து நடத்தி வருகின்றார்கள். அவர்களது அருள் நோக்கம் பெற்று உலகு உய்யுமாக!

மேலே கண்ட சேந்தனாரின் வரலாற்றிலிருந்து, பல உண்மைகளை நாம் அறிகிறோம்.

அவைகளாவன :- உலகப் பொருள்கள் எல்லாம் நிலையற்றன என்பதும், குருவருள் ஒன்றனையே நாம் நாடின், இறைவன் தானே வந்து நம்மைத் தலையளித்து ஆட்கொள்ளுவன் என்பதும்; இன்ப துன்பமிரண்டினும்

இறைவனையே நாடுதல் வேண்டும் என்பதும், நல்லா ரிணக்கம் திருநெறி தந்தருளும் என்பதும், மற்றுப்பற் றின்றி அவிழ்ந்த மனத்து அன்பொடும் செய்யும் செயல் இறைவனுக்கு இனியதாகும் என்பதும், தாமே உழைத்துத் தேடிய நற்பொருள் கொண்டே அறம் இயற் றல் வேண்டுமென்பதும், இறைவன் அருள் இருப்பின் செயற்கருஞ் செயல்கள் தாமேவந்து கைகூடும் என்பதும், அதனால், அரசன்முதல் அனைவரும் அதனைப் பின்பற்றி யொழுகுவரென்பதும், இறைவனுடன் உறவு கொள்ள ஆழ்ந்த உறுதிப்பாடு வேண்டும் என்பதும் ஆம்.

எனவே, இதனைக் கண்ணுறும் அன்பர்கள் யாவ ரும், ஒவ்வொரு திருவாதிரை நாளிலும், அல்லது மார் கழித் திருவாதிரைத் திருநாளிலாவது, தாமே தேடிய பொருள் கொண்டு, இயன்ற அளவு இனிய களியமுது செய்து, இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச் செங்கமலப் பொற்பாதம் தந்தருளும் சேவகனுக்கு இனி யதாக, அவிழ்ந்த மனத்தோடு, அன்புபெருகப் படைத்து, ஓர் அடியவருடனும், விருந்து, ஒக்கல் ஆகியவருடனும் உண்ணுதல் சிறந்த சிவபுண்ணியப் பேருகும், என்ப தனை அறிந்து செய்து, இருமை இன்பமும் பெற்றுப்

பெருவாழ்வு வாழ்ந்தருள இறைவனை இறைஞ்சி வேண்டிக்கொள்ளுகிறேன்.

"செங்கணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பம் நம்பாலதாகுக!

"ஞாலம் நின் புகழேமிக வேண்டும்" தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

சிதம்பரம்.
கலக ஆண்டு
மார்கழி 19-ஆம்நாள்
(1—1—69)

இங்ஙனம்,
ஆக்கியோன்,
ஓய்வுத் தமிழாசான்,
**சண்முக-தங்கவேலன்.**





## மலர் இரண்டு

தில்லை, ஸ்ரீ சிவகாமி அம்மை,
மகளிர் கூட்டு வார வழிபாட்டுச் சபையினர்,
வேண்டியபடி
இம்மலர் வெளியிடப் பெறுகின்றது.

குறிப்பு:- இப்புத்தகம் வாங்குவோர் தரும் பொருள், மீண்டும் இதுபோன்று புத்தக வெளியீடுகள் வெளிவர உதவி புரிகின்றது என்பதனை அறியவும்.

விலை: 0-12 காசு.

பாண்டியன் அச்சகம், சிதம்பரம்.